உ

கடவுள் துணை.

விரோதி

# ஜாலக்கண்ணாடி.

## முதற்பாகம்.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,




தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கடவுள் துணை.

# வினோதஜாலக்கண்ணாடி.

காப்பு-விருத்தம்.

சத்தியபராபரனையே யொன்றேகாப்பு
சர்வவுயிராயெடுத்த சிவமேகாப்பு
அத்திமுகமாய்விளங்கு மருளேகாப்பு
ஆறுமுகமாகிவந்த குருவேகாப்பு
எத்திசையுமளித்தபரப் பிரம்மங்காப்பு
இரணியனைக்கூறுகண்ட மாலேகாப்பு
சித்தர்பதினெண்பேர்கள் செயலேகாப்பு
சிறுகஜாலக்காள் பாதங்காப்பே

1-வது சபையோர்க்கு பன்னீர்தெளிக்குஞ்சாலம்.

சிறுவர்முதல் பெரியோர்கள் நிறைசபைக்கு
செய்பவேவேறுமடா மரியாதைத்தான்
அருமையாம்பன்னீரை தெளிக்குஞ்சாலம்
அப்பனே அருவிருந்தா லதுவேசூட்சம்
ஒருகுவளைகிணற்றுஜெலம் சபையில்வைத்து
உத்தமனே சொம்புக்குள் பாதியூற்றி
வரிசையாய்தெளித்துநீ கேட்டபோது
வாய்முறுத்துசனங்களெவர் வெறும்நீரென்பார்
மறுபடியும்ரீதிசலம் தன்னைப்பார்த்து
மண்கின்னிபோட்டதிலே குலுக்கியூற்றி
நிரைசபையில் தெளித்துவர யென்னசொல்வேன்
நிலமெங்கும்வாசனைகள் நிறைந்துபோமே.

(வ-ம்) ஒரு குவளையில் கிணற்றுஜெலத்தை மொண்டுவந்து சபையில்வைத்து பன்னீர்சொம்பைத்திறந்து கொஞ்சம் செலம் விட்டு தெளித்துக்கேட்டால் வெறும் தண்ணீர் யென்பார்கள் அப்போது சபையாரைப்பார்த்து யாரோ கட்டிவிட்டார்களென் றுசொல்லி விபூதியெடுத்து சல் மனியாளப்சவதி கட்டை வில

க்கு எதிரியைத்தாக்கு பகையாளியைக்கொல்லு திக்குங்கட்டு திசையைக்கட்டு பூமியைக்கட்டு ஆகாயங்கட்டு உடலைக்கட்டு யிடைவிடாமல் இங்கையேயிரு சல் இந்த நல்லதண்ணியை பன்னீராக்குயென்று விபூதியையெடுத்து அந்தத்தண்ணீரில்போட்டுக் கலந்துவிட்டு சொம்பில்வூத்தி தெளித்தால் குபிலென்று வாசனைவீசும் ஆனால் தண்ணியில் போடப்போகும் விபூதியில் முன்னதாகவே அத்தர் பில்லையைப்பொடிப்பண்ணி மிச்சமாகக் கலந்திருக்கவேணும்.

2-வது பந்திசெண்டு கொடுக்கும் சாலம்.

போமப்பாபன்னீர்தான் தெளித்து ஆனால்
புண்ணியனேபந்திசெண்டு கொடுக்கவேணும்
நாமப்பா என்னசொல்வோம் கருப்புவர்னக்
கந்தையினால் பொம்மைபோல் தைத்துக்கொண்டு
ஆமப்பா பந்திசெண்டு சிலதுவாங்கி
ஆதிமுதல் அந்தமட்டும் துருத்துப்போட்டு
வேமப்பா சபையோர்க்கு இந்தபொம்மை
வோடிவாகுட்டிசாத்தா னென்றுகாட்டி.
காமப்பாசல்லாவில் மூடிக்கொண்டு
கைமுறையாய்ப்புஷ்பங்கள் கொடுத்துவாயே

(வ-ம்) கருப்புத்துணியினால் ஒரு அடிநிகளத்தில் குட்டிச்சாத்தானைப்போல் பொம்மையாகத்தைத்து தலைமுதற்கொண்டு புஷ்பச் செண்டுகளை கால்வரையிலுந்துருத்து அதின்கால்யிரண்டையும் பிடித்துக்கொண்டு சபையில்காட்டி சல் குட்டிச்சாத்தான் சீக்கிரம் ஓடிப்போய்பூந்தோட்டத்தில் புகுந்து தோட்டக்காரன் கண்களைமரைத்து நன்றாய்மலர்ந்தபூவாய் பரித்து பந்திசெண்டுகளாகக் கட்டிக்கொண்டு வாவென்று சொல்லி மேசைமேல் வைத்து மேலே ஒருவஸ்திரம்போட்டு மூடிவிட்டு மாத்திரைக்கோல்கையிலெடுத்து (ஏக்-தோ-தின்) (ஒன்-டூ-த்ரீ) (ஒகடி-ரெண்டு-மூடு) (ஒன்று-ரெண்டு-மூனு) யென்று காலுந்தலையுமாயெண்ணி அதின் தலைப்புறமாக வாயைவைத்து ஓ குட்டிச்சாத்தான் பூச்செண்டு கொண்டுவந்தையாவென்று கேட்கவும் அப்படிகேட்கும்போது அடுத்தவீட்டில் ஒருவன் யிருந்துக் கொண்டு வந்தேன்யென்று கிச்சுக்குரலாக சொல்லவும் பின்பு வஸ்திரத்தின்கிழாக கையைவிட்டு காலில்யிருந்து ஒவ்வொரு செண்டாகயெடுத்து வெளியில் போடவும் மற்றொருவன் பெடுத்து வரிசையாய் கொடுக்கப் பிர்மித்து ஆச்சரியப்படுவார்கள்.

3-வது வாட்டிலோடு மெல்லுஞ்சாலம்.

ஆதியென்றசபைதனிலே வருகுமுன்னே
அப்பனே காரமதை வாயிலிட்டு

சொரியாம் வாட்டிலொடு தனையெடுத்து
சூழ்ந்திருக்குஞ் சபையோர்க்கு நன்றாய்க்காட்டி
நீதியாய் மந்திரங்கள் மிகவேசொல்லி
தில்லடி பகவதி காளியென்று
ஓதியே வாட்டில்தனைக் கடித்துப்பாரு
உண்மையடா அரிசிபோல் மெல்லலாமே.

(வ-ம்) காரம் என்பது அக்ராரகாரத்தை ஒரு சிறியதுண்டு வாயில்போட்டு நன்றாய் கசகசவென்றுவென்று தாடையிலடக் கிக்கொண்டு வாட்டிலொட்டைக் கடித்தால் அரிசிபோல் மசியும் வாய் அறுக்காது.

4-வது கரைத்தமஞ்சள் எடுக்குஞ்சாலம்.

மஞ்சளதை மெழுகுபோ லரைத்துக்கொண்டு
மைந்தனே தண்ணீரில் கரைத்துநீதான்
அஞ்சாமல் சபைநடுவே வைத்துக்கொள்ளு
அதற்கெதிரி நீர்முள்ளி விதைதானப்பா
கொஞ்சமது பொடிசெய்து நீறிற்றூவி
கொற்றவனே கலக்கியதை வழித்தையானால்
மஞ்சளது கரைத்தவுண்டை வந்தேபோச்சு
மகிமையங்கே யாச்சரிய மென்பார்தானே.

(வ-ம்) மஞ்சள் அரைத்தவுண்டையை ஒரு பொகணியில் ஜலம்வார்த்து கரைத்துவிட்டு நீர்முள்ளிவிரையை தூளாய் நசுக்கி விபூதியில் கலந்துகொண்டு சல் மலையாளபகவதி ஓடிவா ஓடிவா கரைந்த மஞ்சளைக் கொண்டுவாயென்று சொல்லிக்கொண்டே அந்த விபூதியைபோட்டு வழித்தால் உருண்டையாய்வந்து விடும்.

5-வது சங்கிலியுருவுஞ்சாலம்.

ஆச்சரிய மின்னமொரு ஜாலங்கேளு
அக்கினியில் சங்கிலியைக் காயப்போட்டு
கூச்சமில்லை கத்தாழை மடலின்சோற்றை
கொண்டுவந்து விளக்கெண்ணை தனிற்கலந்து
ஆச்சரியம் சங்கிலியை கயற்றால்தூக்கி
அப்பனே வலதுகையா லெண்ணைவாரி
சல்பரிந் துனையென்றே யுருவினாக்கால்
எரியுமடா சங்கிலிதான் கைவேகாதே.

(வ-ம்) கத்தாழைமடல்சோற்றை பில்லைபில்லையாக அறுத்து விளக்கெண்ணையில் போட்டுவைத்து சங்கிலியை நன்றாய்க் காய வைத்து கயர்மாட்டி இடதுகையில்தூக்கி வலதுகையில் கத்தா ழை மடலோடு எண்ணெயைவாரி உருவினால் சங்கிலிதுப்பென் றெரியும் கைசுடாது

6-வது காகிதத்தில் பனியாரஞ்சுடுஞ்சாலம்.

தேரின்ற பிரண்டைதனை யரைத்துக்கொண்டு
திடமான காகிதத்தால் தொன்னைசெய்து
மாரியே பின்புரத்தில் மூன்றுபூசல்
மைந்தனே யுலரவைத்துப் பூசிவாங்கி
கோரியே மூன்றுகல்லை யடுப்புபோலே
கூட்டியே தொன்னையதின் மேலேவைத்து
வாரப்பா எண்ணெயது காய்ந்தபின்பு
வடைப்போளி யதிரசங்கள்சுட்டுவாங்கே.

(வ-ம்) திடத்த கடுதாசியை தொன்னைபோல்ஒட்டி தேறின பிரண்டையை அறைத்துபின்புரம்மூன்று பூசல்பூசி காயவைத்து மூன்று சிறுகல்லை அடுப்பாய்வைத்து மேல்படி தொன்னையை யேந்தி யெண்ணெவார்த்து காய்ந்தபிறகு பலகாரஞ்சுடவும் ஆனால் பிரண்டையை அறைக்கும் போது கைவிரல்கழுக்கு விளக்கெண்ணை தடவாவிட்டால் எரியும்.

7-வது ஜலத்தைகட்டுஞ் சாலம்.

வாங்கப்பா குசவனிடம் சென்றுநீதான்
வேகாத பச்சையென்ற தோண்டிதன்னை
வாங்கப்பாநருவிலியாம் பழத்தைவாங்கி
வன்மையாய் தோண்டியுள்ளே பூசுபூசு
தாங்கவே முப்பூசல் பூசிக்காச்சி
தண்ணியதில் நிரப்பியுக்கம் போட்டுத்தூக்கி
தாங்குகின்ற வோட்டையெல்லாந் தட்டிப்போடு
தண்ணியங்கே யந்திரமாய் நிற்கும்பாரே.

(வ-ம்) ஒருபச்சைத்தோண்டியின் உள்ளுக்கெல்லாம் நருவிலிப் பழத்தைப் பிசைந்து மூன்றுதரம் பூசிக்காய்ந்தபிரகு தண்ணியை நிறையவிட்டு உக்கமபோட்டு மேலேதூக்கிக் கட்டின பிரகு ஓட்டையெல்லாந் தட்டிவிட்டால் அந்தரமாய் நிற்கும்.

8-வது சலத்தை அல்வாசெய்யுஞ் சாலம்.

பாரப்பாசலக்கட்டு சாலந்தன்னில்
பாடுகிறே னின்னமொரு சாலங்கேளு
நீரப்பாநல்லசலங் குடத்தில்மொண்டு
நினைவாகக் கட்டுகொடி யென்றமூலி
சேரப்பா சர்க்கரையுந் தாக்கிக்கொண்டு
சென்றுபோ லாகுமடா நிமைநேரத்தில்
கூரப்பா சிலைசுபோ லறுத்துநீதான்
கொடுத்துவா சபையிலுள்ள பேர்க்குத்தானே.

(வ-ம்) நல்லசலத்தை குடத்திலொன்று கட்டிக்கொடியென் கிறமுசிகையை துண்டுதுண்டாகத் தரித்துப்போட்டு சர்க்கரை யுங் கொஞ்சம் போட்டுக்கலக்கி மூடிவைத்தால்சற்றுநேரத்தில் அதுவாப்போல் பந்தனையாய்விடும் கந்தியிறைலறாத்து அனைவரு க்கும் கொடுக்கலாம் இதைசாதாரணமாய் செய்துநின்றாலும் காது விர்த்தியாகும்.

9-வது சில்லிகுடத்திற் தண்ணிநிற்குஞ் சாலம்.

தானென்ற யின்னமொரு சாலஞ்சொல்வேன்
தயவாகத்தோண்டியொன்று வாங்கிநான்
கோனென்ற எழுத்தாணிக் கூறினாலே
குத்தப்பாவுடம்பெல்லாஞ் சில்லியாக்கி
மானென்றநருவிலியும் அத்திரெண்டும்
மைத்தனையரைத்தமதி உள்ளேபூசி
தானென்றஜலம்வார்த்து தூக்கிபாரு
தரையிலொருபொட்டு விழாதிருக்குஞ் சொன்னேன்.

(வ-ம்) ஒருகுடத்தை எழுத்தாணியால் சில்லிகள் செய்து அத்திபிலையும் நருவிலியிலையும்பழமுஞ்சேர்த்து ஒன்றிரண்டுமா யரைத்து உள்ளேபூசி சற்றுநேரம் பொருத்து சலம்வார்த்துத் தூக்கினால் ஒருதுளியுஞ்சிந்தாது.

10-வது நீரில் விளக்கெரியுஞ் சாலம்.

சொன்னதேவதத்திமரப் பால்தானப்பா
துவட்டிநீ திரியாகத் திரித்துக்கொண்டு
நல்லசலம் கலசத்திற் காலாய்விட்டு
நனையாமல் வத்தியின்கீழ் தடைதாவிட்டு
மெல்லவேதிமூட்டி சபையிற்காட்டு
மெய்த்தெய்வ வருளென்பார்கள் தடைகட்டாதே
அல்லவேயின்னமொரு வித்தைகேளு
அம்முறையும் பலிக்குமடா வாண்டுபாரே.

(வ-ம்) அத்திமரத்திலுடையபாலே துல்லிதமான சல்லாக்கந் தையில்துவட்டி திரியாகத்திரித்து கொஞ்சம் ஆழமானகலசத் தில் கால்பங்கு சலத்தைவிட்டு ஆனல் சலத்துக்குமேல் ஒருயி ழையுயரமானசிறுகல்லு களாவது போட்டுவத்திநனையாத பக்கு வமாய் வைத்துக்கொளுத்திக் காட்டினால் நம்புவார்கள் அதில் தடையுள்ள கலசமாகவே செய்துவைத்துக் கொண்டால் முன் னேவத்தியைபோட்டு எல்லார்க்கும் நடுவில்நின்று சலத்தைவிட ாம் வத்திநனையாமல் விடவேணும்.

## 11-வது தீபங்காட்டுஞ் சாலம்.

ஆண்டுபார்குக்கிலியம் பொடித்துநீதான்
அப்பனேசீலையிலே பரப்பிச்சுத்தி
வேண்டிப்பார் வத்திப்போல் திரித்துக்கொண்டு
விளக்கெண்ணய் தனிற்றோய்த்து கலசத்திலிட்டு
தூண்டுவாய் சலம்வார்த்துத் தீயைமாட்டு
தொல்லுலகோர் தூர்க்கையுட வசியமென்பார்
வேண்டியேபின்னமொரு சாலமுண்டு
விபரமாய் கேட்கவதை விளம்புவேனே.

(வ-ம்) குங்கிலியமும் கர்ப்பூரமும் பொடியாய்ச்செய்துநசுக்கி ஒருகந்தையில் பரப்பி திரியாய்த்திரித்து விளக்கெண்ணெயில் தோய்த்துவைத்துக்கொண்டு முன்போல்நடையுள்ளகலசத்தில் வத்திபோட்டு நடைக்கு ஒருவிழை குறைவாகவே ஜலத்தை விட்டுக் கொளுத்தி சபையில்வைத்தால் இரண்டுநாழிகை எறியும் நிஜமாகமே நம்புவார்கள் சிலர்காளிவசியம் என்பார்கள்.

## 12-வது தீபங்காட்டுஞ் சாலம்.

விளம்பவேதிருகுகள்ளி பாலைவாங்கி
விகசிதமாய்கர்ப்பூரம் பாலிடையேசேர்த்து
குளம்பவேஇரண்டுமொன்று யறைத்துக்கொண்டு
குணமாகச்சீலையிலே தாவட்டிக்காய்ச்சு
தளும்பவேகலசத்தில் ஜலத்தைக்கொட்டி
நடையிட்டுவத்தியிட்டு தீயைமாட்டு
கலங்கியேசபையோர்கள் பார்த்தபோது
கண்கட்டுஜாலமென்பார் கபடாய்ச்செய்யே.

(வ-ம்) திருகுகள்ளிபாலை கரண்டியளவெடுத்து கற்பூரம் அதேயளவெடுத்து இரண்டையுமரைத்து சீலையில்தடவி யுலர்த்தி வத்தியாய்த்திரித்து நடையிருக்கும் கலசத்தில்போட்டு ஜலத்தைவார்த்து விளக்கேத்திக்காட்டினால் ஆச்சரியப்படுவார்கள்.

## 13-வது குளத்திலிருந்து விபூதியிடுஞ் சாலம்.

செய்யவேகொடிக்கள்ளி பால்தானப்பா
திருநீற்றைப்போல்குழைத்து முகத்திலிட்டு
உய்யவே புஜங்கழுத்து மார்புதொந்தி
உடம்பெல்லாம் சிவயோகி போலேபூசு

வெய்யலிலே சற்றிருந்து சபையில்வந்தால்
வேற்றுடம்பா யிருக்குமடா ஒன்றுந்தோற்று
தூய்யவே குளங்கிணற்றில் மூழ்கிவந்தால்
துல்லிதமாய்யிருக்குமடா வுலருமட்டும்.

(வ-ம்) கொடிக்கள்ளிபாலை விபூதிபோல்குழைத்து சிவயோகி போல் திரேகமுழுவதும் கட்டுகட்டாயிட்டு வெய்யலில்நின்றால் உலர்ந்தபிரகு ஒன்றுந்தெரியாது அனைவருக்குங்காட்டி பிறகு ஒருகுடம் ஜலத்தை சிரசில்ஊற்றினால் உடனே பளிச்சென்று யோகியைப்போல் இருக்கும். பார்த்தவர்களெல்லாம் ஆச்சரிய மாய் பிரமிப்பார்கள்.

## 14-வது மணலைமெல்லுஞ் சாலம்.

இருக்குமடா வின்னமொரு ஜாலங்கேளு
எவ்வளவோ சூக்ஷமதி லாச்சரியம்பார்
கருத்தகுறிக்குண்டுமெணி யிலைதானப்பா
கண்மணியே தாடையிலே மென்றடக்கி
பிரிதொன்று மில்லையடா வாற்றிலுள்ள
பெருமணலோ சிறுமணலோவெதுவானாலும்
வருந்தமில்லை சக்கரைபோல் தின்னலாகும்
வளமாகச் செய்திட்டால் வணங்குவாரே.

(வ-ம்) குண்டுமெணியிலையை மென்று தாடையில் அடக்கிக் கொண்டு மணலை மென்றுதின்றால் எவ்வளவானாலும் சலிப்பில் லாமல் தின்னலாகும்.

## 15-வது புட்டியிலே முட்டைவிடும் வித்தை.

புட்டியிலேகோழிமுட்டை விட்டிருந்தால்
பார்ப்பவர்க்கு ஆச்சரியந்தானே அப்பா
முட்டைதன்னைச் சிமையுடக்காடிதன்னில்
மூன்றுகாலுறவைத்து யெடுத்துக்கொண்டு
புட்டியிலே விட்டாக்கால் துவண்டுப்போகும்
போனபின்பு தன்னுருவம் பூண்டுக்கொள்ளும்
இட்டமுடன் முனிசாமியெழுதிவைத்தான்
யென்னபிழை வந்தாலும் யேற்பீரையா.

முதற்பாகம் முற்றிற்று.